[24th January 1961

SRI A. A. RASHEED: Will the Government change the working hours to morning at least in the summer when it is so hot that it is difficult to concentrate on work?

THE HON. SRI C. SUBRAMANIAM: That is also one aspect which has to be kept in mind. But as I already stated this is a matter which is just under consideration. No question of any decision having been taken arises.

SRI A. VEDARATHNAM: கனம் அமைச்சர் அவர்கள் கூறி வருகிற அந்த மாறுதலுக்கு, காலை 8½ மணிக்கு வேலை துவங்க வேண்டுமென்ற மாறுதலுக்கு நம் நாட்டில் முழுவதும் பெருத்த ஆதரவு இருக்கிற காரணத்தால் அதை விரைவில் அமுலுக்கு கொண்டுவர அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்கு ஆதரவு அளிக்கக் கூடிய முறையில் பல கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. சில பத்திரிகைகளும் இதை ஆதரித்து எழுதியிருக்கின்றன. அதே போல் ஒரு சிலர் மாறுபட்ட கருத்தையும் தெரிவித்திருக்கிறார்கள். கடைசியில் எது சௌகரியம் என்று யோசித்து முடிவு செய்ய வேண்டும்.

*Clerks*

* 129 Q.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to change the designation of "clerks" of Madras Secretariat to "Assistants"?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRI A. A. RASHEED: Have the Government received any suggestion from the N.G.O.'s Association for changing the name of "Clerks" to "Assistants"?

THE HON. SRI C. SUBRAMANIAM: பெயர் மாற்றுவது என்பது ஒரு வியாதியாக பரவிக்கொண்டு இருக்கிறது. பெயர் மாற்றினால் என்ன வந்துவிடுமென்று தெரியவில்லை. ஆகவே இது அவசியமில்லை. தொடர்ந்து இதையே நாம் உபயோகப்படுத்திக் கொண்டுவருவதில், அதில் இழிவு கிடையாது. ஆகவே இதை மாற்றவேண்டிய அவசியமில்லை என்பது சர்க்கார் கருத்து.

*Fair price shops*

* 130 Q.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to open fair price shops in the North Arcot district owing to the failure of monsoon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The Government have ordered the opening of fair price shops in all districts of this State, including North Arcot district.

24th January 1961]

**Sri A. A. RASHEED**: May I know the number of fair price shops opened in North Arcot district?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Number of fair price shops actually opened is 90 whereas what has been sanctioned is only 50.

**Sri M. KALYANASUNDARAM**: *ராஜ்யம் பூராவுமே நியாய விலை கடைகள் திறக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் கூறினார்கள். எத்தனை நியாயவிலைக் கடைகள் ராஜ்யம் பூராவும் இயங்குகின்றன? எவ்வளவு அரிசி அவற்றின்மூலம் விநியோகிக்கப்பட்டிருக்கிறது?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: *நானூற்று நாற்பத்தொன்று கடைகள் திறக்கப்பட்டிருக்கின்றன ராஜ்யம் பூராவும். முதலில் ஐந்து மூட்டைகள் ஒரு கடைக்கு கொடுப்பதாகயிருந்தது. இப்பொழுது பத்து கொடுக்க உத்தரவிடப்பட்டிருக்கிறது. பத்து மூட்டை சென்னை நகரில் கொடுப்பதாகயிருந்தது, பதினைந்து மூட்டை கொடுக்க உத்தரவு இடப்பட்டிருக்கிறது.*

**Sri A. A. RASHEED**: May I know whether rice is distributed through co-operative societies and multi-purpose co-operative societies in North Arcot district?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Yes, fair price shops are all run by co-operative societies.

**Sri R. RAMAMIRTHA THONDAMAN**: *சமீபத்தில் அடித்த பேய்மழை காரணமாக பாதிக்கப்பட்ட தஞ்சை ஜில்லாவிலுள்ள மீனவர்கள் வசிக்கும் பகுதிகளில் நியாயவிலைக் கடைகள் திறக்க சர்க்கார் முயற்சிக்குமா?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: *தஞ்சை ஜில்லாவில் 35 கடைகள்வரை திறந்திருக்கிறது. வட ஆற்காடு ஜில்லாவில் 19 என்று சொன்னேன். தஞ்சையில் 35 இருக்கும்போது கனம் அங்கத்தினர் குறைகூற இடமில்லை.*

**Sri S. RANGANATHA MUDALIAR**: The Collector of Chingleput told me the other day that he had recommended to the Board of Revenue the closure of all fair price shops in the district because of the recent rains and there was no necessity to continue the fair price shops. Will the Government please look into the matter and see that these shops are allowed to continue?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: I have been looking into the matter.

**Sri N. K. PALANISAMI**: *1958-59 வருடங்களில் கிட்டத்தட்ட ஆயிரம் நிவாரணக் கடைகள் வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுது*

400தான் மாகாணம் பூராவும் திறக்கப்பட்டிருக்கின்றன. இது போதுமானதில்லை. ஆகவே இதை உயர்த்த சர்க்கார் உத்தேசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இது ஒன்றும் உரிமை இல்லை. ஆயிரம் கடைகள் இருக்கலாம். இரண்டாயிரம் இருக்கலாம். இப்பொழுதுள்ள நிலையை உத்தேசித்துத்தான் கடைகள். மேலும் சென்ற வருடம் கொள்முதல் செய்தோம். கொள்முதல் செய்து கடைகளில் வைத்து விற்றோம். அவ்வளவு மோசமாக இப்பொழுதில்லை. ஆகவே ஆயிரம் கடைகள்கூட வைக்கவேண்டிய அவசியமில்லை என்பதுதான் இச்சர்க்கார் கருத்து.

SRI K. PONNIAN : பரம்பிக்குளம் போன்ற திட்டப் பகுதியில் நியாயவிலைக் கடைகள் இருந்தும் போதுமான அரிசி சப்ளை செய்ய முடிவதில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதை அதிகப்படுத்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கோவையில் 70 கடைகள்வரை சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இது வரை 21 கடைதான் வைத்திருக்கிறார்கள். குறிப்பான குறை பாடுகள்பற்றி அங்கத்தினர் அவர்கள் தெரிவித்தால் அதை மேலும் கவனித்து வேண்டியது செய்யலாம்.

SRI K. VINAYAKAM : Is it not a fact that Government have passed orders instructing the Collectors to close these shops by the end of this month? Is it because of the fact that we have not enough stock of rice? Would it not be possible to continue these shops for some time more till the demands of the people of the State are fully met?

MR. SPEAKER : The hon. Member is repeating the question put by Sri S. Ranganatha Mudaliar.

THE HON. SRI M. BHATAVATSALAM : Collectors have been authorized to close these shops whenever they feel that there is no further need to run these shops. There is no question of stock. We are getting stocks now and then from the Government of India.

SRI M. KALYANASUNDARAM : நியாயவிலைக் கடைகள் மூலம் விநியோகிப்பதற்கு கைவசம் எவ்வளவு ஸ்டாக் இருக்கிறது ? இன்னும் அதிகப்படுத்த ஏதாவது முயற்சி உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது அதிகப் படுத்த வேண்டிய பிரச்னையில்லை. மத்திய சர்க்கார் கொடுப்பதற்கு ஒப்புக்கொண்டதே வேண்டிய அளவு ஸ்டாக் இருக்கிறது. அதிகப் படியான கடைகள் வைப்பதற்குக்கூட ஸ்டாக் இருக்கிறது, ஸ்டாக் பற்றி குறைவில்லை.